# (46) இந்து நாகரிகம்

## வினாத்தாள் கட்டமைப்பு

**வினாத்தாள் I -** **நேரம் : இரண்டு மணித்தியாலங்கள்.**
ஐந்து தெரிவுகளைக் கொண்ட **50** பல்தேர்வு வினாக்களைக் கொண்டுள்ளது. **எல்லா** வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும். ஒரு வினாவிற்கு **01** புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் **50** ஆகும்.

**வினாத்தாள் II -** **நேரம் : மூன்று மணித்தியாலங்கள்.** (மேலதிக வாசிப்பு நேரம் 10 நிமிடங்கள்)
இவ்வினாத்தாள் **பகுதி I, பகுதி II** என **இரு** பகுதிகளைக் கொண்டது.

**பகுதி I** - இப்பகுதி **மூன்று பகுதிக் கட்டமைப்புவகை** வினாக்களைக் கொண்டது. அவற்றுள் எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கு விடையெழுதுதல் வேண்டும். ஒரு வினாவுக்கு **20** புள்ளிகள் வீதம் மொத்தப்புள்ளிகள் **40**.

**பகுதி II** - இப்பகுதி **ஐந்து கட்டுரை வகை** வினாக்களைக் கொண்டது. அவற்றுள் எவையேனும் **மூன்று** வினாக்களுக்கு விடையெழுதுதல் வேண்டும். ஒவ்வொரு வினாவிற்கும் **20** புள்ளிகள் வீதம் **60** புள்ளிகள் வழங்கப்படும். **வினாத்தாள் II** இற்கு மொத்தப் புள்ளிகள் **100** ஆகும்.

| | | |
|---|---|---|
| இறுதிப் புள்ளியைக் கணித்தல் : | வினாத்தாள் I | = 50 |
| | வினாத்தாள் II | = 100 ÷ 2 = 50 |
| | இறுதிப் புள்ளி | = 100 |

## வினாத்தாள் I

**அறிவுறுத்தல்கள்** :
* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க. பல்தேர்வு வினாக்களுக்கு விடையளிப்பதற்குரிய தாள் வழங்கப்படும்.

---

**1.** இந்து நாகரிகத்தின் வரலாற்றினை அறிந்துகொள்வதற்குதவும் சாதனங்களைக் குறிக்கும் தொகுதி,

(1) பிறநாட்டார் குறிப்புக்கள், இலட்சினைகள், கம்பராமாயணம்
(2) மரபுக் கதைகள், இலட்சினைகள், பஞ்சதந்திரம்
(3) இலக்கியங்கள், பிறநாட்டார் குறிப்புக்கள், சோதிட நூல்கள்
(4) கல்வெட்டுகள், இலக்கியங்கள், பிறநாட்டார் குறிப்புக்கள்
(5) பெரிய புராணம், தாயத்துக்கள், இரகுவம்சம்

**2.** உலக நாகரிக வரலாற்றில் இந்து நாகரிகம் தனித்துவமானது என்பதற்கான காரணம்,

(1) பல்வேறு பேரரசுகளின் அரசியல் வரலாற்றைக் கூறுவது
(2) பயன் கருதிச் செயற்படும் கடமையை வற்புறுத்துவது
(3) சமயம், தத்துவம், கலை, அரசியல், அறிவியல் ஆகியவற்றைக் கொண்டுள்ளது
(4) உலகியலையும் ஆன்மீகத்தையும் இணைக்காத வகையில் வளர்ச்சி பெற்றமை
(5) கால தேச வர்த்தமானங்களுக்கு உட்பட்டது

**3.** 'ஏகம் சத்' என்ற தொடர் முதன் முதலாக இடம்பெறும் மூலநூல்,

(1) யசுர்வேதம்　(2) இருக்கு வேதம்　(3) பிரம்ம சூத்திரம்
(4) பகவத் கீதை　(5) கடோபநிடதம்

**4.** வேதங்களும் ஆகமங்களும் மெய்யானவை எனவும், இறைவன் நூல் எனவும் போற்றியவர்,

(1) திருமூலர் (2) யாஷ்கர் (3) சுவாமி விவேகானந்தர்
(4) வசிட்டர் (5) மக்ஸ்மூலர்

**5.** சங்ககால இலக்கியங்களில் இந்து தர்மத்தின் சிறப்பினைக் குறித்து நிற்கும் தொடர்,

(1) நீ அதுவாக இருக்கின்றாய் (2) யாதும் ஊரே யாவரும் கேளிர்
(3) என்கடன் பணி செய்து கிடப்பதே (4) எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டுவதே
(5) பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல்

**6.** பல்லவர்களது சமயச்சின்னத்தைக் குறிக்கும் தொகுதி,

(1) சேவற்கொடி, மயில்கொடி
(2) சிங்கக் கொடி, ஆஞ்சநேயர் கொடி
(3) நந்திச் சின்னம், சிவனின் கட்டுவாங்கக் கொடி
(4) மீன் கொடி, கருடத்துவஜம்
(5) சங்கு, சக்கரம்

**7.** 'மங்களாசனம்' பெற்ற திவ்யதேசங்களின் உருவாக்கத்திற்கு அடித்தளமிட்டவர்கள்,

(1) நாயன்மார்கள் (2) ஆழ்வார்கள் (3) அரசர்கள்
(4) சித்தர்கள் (5) சந்தானகுரவர்கள்

**8.** ஆழ்வார்களில் மூவரின் பெயர்களைக் கொண்டுள்ள தொகுதி,

(1) பொய்கையாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார்
(2) பூதத்தாழ்வார், பெரியாழ்வார், இராமானுஜர்
(3) தொண்டரடிப்பொடியாழ்வார், பேயாழ்வார், இராமானுஜர்
(4) பொய்கையாழ்வார், பெரியாழ்வார், இராமானுஜர்
(5) ஆண்டாள், மணவாளமுனி, பொய்கையாழ்வார்

**9.** விஜயநகர நாயக்கர் காலத்தில் வைணவத்தில் கோட்பாட்டு ரீதியாக ஏற்பட்ட பெருமாற்றம்,

(1) சிவ விஷ்ணு உறவு ஏற்பட்டமை
(2) திருமாலைத் தெய்வமாக ஏற்றமை
(3) கோபுரங்களின் வளர்ச்சி ஏற்பட்டமை
(4) வடகலை, தென்கலை வைணவப்பிரிவுகள் வளம் பெற்றமை
(5) அவதாரக் கோட்பாடுகள் மக்கள் மத்தியில் பரவியமை

**10.** வடநாட்டுப் பக்தி இயக்க நெறியாளர்களில் மூவரைக் குறிக்கும் தொகுதி,

(1) கபீர்தாஸர், இராமானந்தர், நிமா (2) இராமானந்தர், ஸ்ரீசைதன்யர், மீராபாய்
(3) ஸ்ரீசைதன்யர், கபீர்தாஸர், போஜ்ராஜ் (4) துளசிதாஸர், மீராபாய், ராககோவிந்
(5) மீராபாய், இராமானந்தர், பரமேஸ்வரர்

**11.** இந்து சமூகம் மறுமலர்ச்சியடைய உழைத்தவர்களுள் 'புதுயுகத் தந்தை' எனப் போற்றப்பட்டவர்,

(1) தயானந்த சரஸ்வதி (2) அன்னிபெசன்ற் அம்மையார்
(3) இராமலிங்க வள்ளலார் (4) ராஜாராம் மோகன்ராய்
(5) இராமகிருஷ்ண பரமகம்சர்

**12.** சுவாமி விவேகானந்தருடைய பணிகளுள் தலையாயதாக அமைவது,

(1) இந்து பாடசாலைகள் நிறுவியமை
(2) ஆலயங்கள் அமைத்தமை
(3) இராமகிருஷ்ண மடத்தை ஸ்தாபித்தமை
(4) ஆலயங்களுக்குத் தானம் வழங்கியமை
(5) பெண்களின் உரிமையை நிலைநாட்டியமை

**13.** இலங்கை வரலாற்றில் அநுராதபுரக் காலம் எனக் குறிக்கப்படுவது,

(1) கி.மு. 2ம் நூற்றாண்டு தொடக்கம் கி.பி. 6ம் நூற்றாண்டு வரை
(2) கி.மு. 1ம் நூற்றாண்டு தொடக்கம் கி.பி. 8ம் நூற்றாண்டு வரை
(3) கி.பி. 9ம் நூற்றாண்டு தொடக்கம் கி.பி. 15ம் நூற்றாண்டு வரை
(4) கி.மு. 3ம் நூற்றாண்டு தொடக்கம் கி.பி. 9ம் நூற்றாண்டு வரை
(5) கி.பி. 3ம் நூற்றாண்டு தொடக்கம் கி.பி. 9ம் நூற்றாண்டு வரை

**14.** பேராசிரியர் கா. கைலாசநாதக் குருக்கள் இந்து நாகரிக வளர்ச்சிக்கு வெளியிட்ட நூல்கள்,

(1) சம்ஸ்கிருத இலகுபோதம், வடமொழி இலக்கிய வரலாறு, சைவத்திருக்கோயிற் கிரியை நெறி
(2) இந்துப் பண்பாட்டு மரபுகள், ஆரியர் ஆதி வரலாறும் பண்பாடும், நடராஜ வடிவம்
(3) சிவாகமங்கள் கூறும் சிவவடிவங்கள், இந்திய சிந்தனை மரபு, திராவிடர் ஆதிவரலாறும் பண்பாடும்
(4) நீலகண்ட பாஷ்யம், தேவாரம் வேதசாரம், கந்தபுராணம் நவநீதம்
(5) இலங்கையில் இந்து கலாசாரம், நால்வர் வாழ்வும் வாக்கும், கணேச தோத்திர பஞ்சகம்

**15.** தானாகத் தோன்றிய சிவலிங்கத்தையும் கல்நந்தி புல்லுண்ட தெய்வீகச் சிறப்பினையும் உடையது,

(1) திருக்கோணேச்சரம்
(2) ஒட்டுசுட்டான் தான்தோன்றீச்சரம்
(3) திருக்கேதீச்சரம்
(4) கொக்கட்டிச்சோலை தான்தோன்றீச்சரம்
(5) நகுலேச்சரம்

**16.** சர்வதேச கலாசார சின்னமாக அறிவிக்கப்பட்ட புகழையுடைய ஆலயத்தின் பெயர்,

(1) லண்டன் முத்துமாரியம்மன் ஆலயம்
(2) ஜாவா பிரம்பனார் கோயில்
(3) கம்போடியாவிலுள்ள அங்கோர்வாட் ஆலயம்
(4) சம்பா பத்திரவர்மன் பத்திரேஸ்வரர் ஆலயம்
(5) தாய்லாந்து வாட்போ கோயில்

**17.** சிறப்பான சமய கலாதத்துவம் தொடர்பான விக்கிரகமாகப் போற்றப்படுவது,

(1) நடராஜர்
(2) லிங்கோற்பவர்
(3) திரிபுராந்தகர்
(4) தட்சணா மூர்த்தி
(5) சோமாஸ்கந்தர்

**18.** திருமுறைப்பாடல்கள் பாடி பக்தி நெறியை வளம்படுத்திய அருளாளர்கள்,

(1) சேந்தனார், கருவூர்த் தேவர், சிவப்பிரகாசர்
(2) திருஞான சம்பந்தர், பட்டினத்தடிகள், குமரகுருபரர்
(3) திருநாவுக்கரசர், உமாபதி சிவாச்சாரியார், சேக்கிழார்
(4) சேக்கிழார், சேரமான் பெருமாள், அருணகிரிநாதர்
(5) திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர்

**19.** புருஷசூக்தம், நாசதீய சூக்தம் முதலானவை குறித்து நிற்கும் உட்பொருள்,

(1) உழவுத் தொழிலின் சிறப்பு
(2) சமூகங்களுக்கிடையிலான ஒற்றுமை
(3) இறைவனுக்கும் பிரபஞ்சப் படைப்புக்கும் இடையிலான தொடர்பு
(4) அக்கினி வழிபாட்டின் சிறப்பு
(5) இல்லற தர்மத்தின் சிறப்பு

**20.** உடலை விட்டுப் பிரிந்த பின் ஆன்மாவின் நிலை பற்றிக் கூறும் உபநிடதம்,

(1) சாந்தோக்கியம்
(2) சுவேதாஸ்வதரம்
(3) பிருகதாரண்யகம்
(4) கேனோபநிடதம்
(5) கடோபநிடதம்

**21.** பிரம்ம சூத்திரத்திற்கான மறுபெயர்,

(1) சுல்வ சூத்திரம் (2) கல்ப சூத்திரம் (3) நாரத சூத்திரம்
(4) சிரௌத சூத்திரம் (5) சாரீரக சூத்திரம்

**22.** பகவத்கீதை கூறும் ஆன்மாக்களுடைய இறுதி லட்சியமாவது,

(1) நல்லோரைப் பாதுகாத்து மகிழ்வித்தல்
(2) விஷ்ணுவினுடைய பாதாரவிந்தங்களையடைந்து பேரின்பத்தை அனுபவித்தல்
(3) விஷ்ணுவை உருவ நிலையில் வழிபடுதல்
(4) விஷ்ணு யாவற்றிலும் வியாபித்திருப்பதை உணர்தல்
(5) தீமை செய்பவர்களைத் தண்டித்தல்

**23.** வேதாந்திகள் மூவரும் தத்துவங்களை நிறுவுவதற்கு அடிப்படையாக அமைந்த நூல்கள்,

(1) இராமாயணம், அற்புதத் திருவந்தாதி, திருமந்திரம்
(2) சுக்கிர நீதி, அர்த்த சாஸ்திரம், மனுதர்ம சாஸ்திரம்
(3) உபநிடதம், பகவத் கீதை, பிரம்ம சூத்திரம்
(4) திருவாசகம், கந்தபுராணம், மாண்டுக்கிய காரிகை
(5) நாலடியார், திருக்குறள், பகவத் கீதை

**24.** பிரம்மம் யாவற்றுக்கும் மூலமானது என்ற கருத்தை வலியுறுத்துவது,

(1) உபநிடத மகாவாக்கியங்கள் (2) இதிகாசங்கள் (3) புராணங்கள்
(4) ஸ்மிருதிகள் (5) சுக்கிரநீதி

**25.** வேதாந்த மரபில் முப்பொருள்களிற்கிடையிலான ஐவகைப் பேதங்களைக் குறிப்பிடும் தத்துவஞானி,

(1) சங்கரர் (2) பாதராயணர் (3) இராமானுஜர் (4) இராமானந்தர் (5) மத்துவர்

**26.** 'சிவமாதல் வேதாந்த சித்தாந்தமாகும்' என்ற கூற்றின் ஆசிரியர் பெயர்,

(1) தாயுமானவர் (2) மெய்கண்டார் (3) உமாபதி சிவாச்சாரியார்
(4) திருமூலர் (5) அருணந்தி சிவாச்சாரியார்

**27.** சிவஞான போதத்திற்கு சார்பு நூலாக விளங்கும் சிவப்பிரகாச நூலின் ஆசிரியர்,

(1) மெய்கண்டார்
(2) திருவியலூர் உய்யவந்த தேவர்
(3) உமாபதி சிவாச்சாரியார்
(4) மறைஞான சம்பந்தர்
(5) அருணந்தி சிவாச்சாரியார்

**28.** விஜய நகர நாயக்கர் காலத்தில் அறக்கருத்துக்களை மிகுதியாகக் கூறும் நூல் ஒன்றின் பெயர்,

(1) நீதி வெண்பா (2) நாலடியார் (3) சுக்கிர நீதி
(4) மனுஸ்மிருதி (5) சிறுபஞ்சமூலம்

**29.** 'மன்னன் தமது தவவலிமையால் அரச பதவியைப் பெறுகிறான்' எனக் கூறும் நூல்,

(1) ஆத்தி சூடி (2) நல்வழி (3) நீதிநெறி விளக்கம்
(4) கடோபநிடதம் (5) நாரதஸ்மிருதி

**30.** பெண்களின் உரிமை தொடர்பான விடயங்களுக்கு முக்கியத்துவம் வழங்கும் ஸ்மிருதி நூல் ஒன்றின் பெயர்,

(1) விஷ்ணுஸ்மிருதி (2) பிருகஸ்பதிஸ்மிருதி (3) போதாயணஸ்மிருதி
(4) ஆபஸ்தம்பஸ்மிருதி (5) நாரதஸ்மிருதி

**31.** இந்து சமூக மேன்மைக்கு உதவும் ஆச்சிரம தர்மங்களைக் குறிப்பிடும் தொகுதி,

(1) புராணபடனம் செய்தல், பாடசாலை அமைத்தல், குளம் அமைத்தல்
(2) சிவனடியாரைப் போற்றல், கோயில் வழிபாடு செய்தல், வேளாண்மை விருத்தி
(3) குடியிருப்புக்களை உருவாக்குதல், பெரியோரை மதித்தல், இல்லற தர்மம்
(4) தனிமனித தர்மத்தைப் பேணுதல், ஒழுக்க நெறிக்கு வழிகாட்டுதல், ஆன்மீக இலட்சியத்திற்கு வழிகாட்டுதல்
(5) பொருள் தேடுதல், ஆலயங்கள் அமைத்தல், அன்னதானம் வழங்கல்

**32.** பௌத்தத்தின் 'பஞ்ச சீலம்' கூறும் மூன்று ஒழுக்கங்களைக் குறிப்பது,

(1) காமமின்மை, ஆலய சேவை, விரதம் அனுஷ்டித்தல்
(2) குருவைப் போற்றுதல், இல்லற தர்மம் பேணுதல், களவின்மை
(3) கொல்லாமை, மது அருந்தாமை, பொய்யாமை
(4) ஆலயம் அமைத்தல், பொய்யாமை, சமயப் பிரசங்கம் செய்தல்
(5) மது அருந்தாமை, பாடசாலை அமைத்தல், அன்னதானம் வழங்கல்

**33.** 'சுவதர்மம்' என்ற பதம் குறித்து நிற்பது,

(1) பசுவுக்குச் செய்யும் நன்மைகள்
(2) பிறருக்குச் செய்யும் நன்மைகள்
(3) சுற்றுச்சூழலைப் பாதுகாத்தல்
(4) ஒவ்வொருவரும் தம்மளவில் செய்யவேண்டிய கடமைகள்
(5) பெண்களைப் பேணிப் பாதுகாத்தல்

**34.** வானியல் வரலாற்றுக்குப் பயன்படும் 'பஞ்ச சித்தாந்திகை' என்ற தொகுப்பு நூலை வெளியிட்டவர்,

(1) ஆரியப்பட்டர் (2) வராகமிகிரர் (3) புளிஷர் (4) வசிஷ்டர் (5) லாடதேவர்

**35.** ஈழத்து சோதிடக் கலை மரபில் கி.பி. 1380 இல் சோமசன்மா என்பவரால் இயற்றப்பட்ட சோதிட நூல்,

(1) இலகு சாதகம் (2) சந்தான மணி (3) விதான மாலை
(4) சந்தான தீபிகை (5) செகராசசேகரமாலை

**36.** இந்து மருத்துவ வரலாற்றில் மருத்துவ சிந்தனைகளை அதிகமாகக் கொண்ட மூலநூல்,

(1) கல்ப சூத்திரம் (2) அதர்வ வேதம் (3) காமிகாகமம் (4) சரகசம்கிதை (5) இராமாயணம்

**37.** இந்திய மருத்துவத்தின் தந்தை எனப் போற்றப்பட்டவர்,

(1) ஆத்திரேயர் (2) சரகர் (3) தன்வந்திரி (4) சுஸ்ருதர் (5) அக்கினிவேசர்

**38.** அருணாசல தேசிகர் இயற்றிய நூல்கள் மூன்றினைக் கொண்ட தொகுதி,

(1) பால பாடம், வேதாந்த கேசரி, பிரபுத்தபாரத
(2) முருகன் மகத்துவ நுட்பம், தேவாரம் வேதசாரம், சைவ வினாவிடை
(3) சைவ சமய சிந்தாமணி, மெஞ்ஞான தீபம், சைவ சமய ஆரம்ப போதினி
(4) மகாலட்சுமி தோத்திரம், நடராஜ வடிவம், உமாமகேசுவரம்
(5) சைவசமய இளைஞர் போதினி, கணேச தோத்திர பஞ்சகம், குமரவேள் நவமணிமாலை

**39.** 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்று இறைவனை இசைவடிவாகப் போற்றியவர்,

(1) திருநாவுக்கரசர் (2) மாணிக்கவாசகர் (3) சேக்கிழார்
(4) சுந்தரர் (5) திருஞான சம்பந்தர்

**40.** ஆரம்பகாலச் சோழர்களின் கட்டடக்கலையின் சிறப்பினைக் காட்டும் ஆலயம்,

(1) தஞ்சைப் பெரிய கோயில்
(2) கங்கைகொண்ட சோழேச்சரம்
(3) வானவன் மாதேவீச்சரம்
(4) விஜயாலய சோழேச்சரம்
(5) ஐராவதேஸ்வரம்

- **41** தொடக்கம் **45** வரையுள்ள வினாக்களில் தரப்பட்டுள்ள கூற்றுகளை வாசித்து, அவற்றுக்குப் பொருத்தமானவற்றை **I, II, III, IV** ஆகிய நிரல்களிலிருந்து தெரிவுசெய்க.

| I | II | III | IV |
|---|---|---|---|
| A<br>பிரசங்கம் செய்தமை | F<br>லகிமா | K<br>கொலை | P<br>கரிமா |
| B<br>அணிமா | G<br>ஆலய புனருத்தாரணம் | L<br>வம்சம் | Q<br>நகை |
| C<br>குணபரன் | H<br>பிரதி சர்க்கம் | M<br>விசித்திரசித்தன் | R<br>சங்கீர்ண ஜாதி |
| D<br>சர்க்கம் | I<br>மோகம் | N<br>கண்டன பிரசுரங்கள் | S<br>மனுவந்தரம் |
| E<br>கற்பம் | J<br>மத்தவிலாசன் | O<br>பிராப்தி | T<br>சைவ வித்தியாசாலை நிறுவியமை |

**41.** நல்லை நகர் ஆறுமுக நாவலர் சமய சமூக வளர்ச்சிக்கென மேற்கொண்ட பணிகளுடன் தொடர்புடைய தொகுதி,

(1) A, C, T, M (2) A, G, N, T (3) G, N, M, K (4) N, S, T, O (5) T, A, B, O

**42.** புராணங்கள் குறிப்பிடும் பஞ்சலட்சணங்கள் அடங்கும் தொகுதி,

(1) D, H, L, S (2) H, K, P, Q (3) H, L, O, R (4) O, A, C, N (5) S, C, E, J

**43.** யோகம் கூறும் அட்டமா சித்திகள் அடங்கும் தொகுதி,

(1) B, F, O, P (2) B, C, A, D (3) F, M, R, T (4) G, E, J, B (5) J, E, M, G

**44.** சைவசித்தாந்தம் கூறும் ஆணவத்தின் குணங்கள் அடங்கும் தொகுதி,

(1) A, C, T, M (2) E, I, K, Q (3) E, R, T, M (4) K, A, B, C (5) Q, I, E, R

**45.** மகேந்திர வர்மனுக்குரிய விருதுப் பெயர்கள் அடங்கும் தொகுதி,

(1) C, A, I, M (2) C, J, M, R (3) M, G, H, E (4) O, A, C, F (5) R, M, I, E

- **46** தொடக்கம் **50** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**46.** சோழர்கால சைவசமய வளர்ச்சி

(1) நடராஜ சின்னம் சோழ அரசர்களது சின்னமானது
(2) நந்திக்கொடி சமயச் சின்னங்களில் இடம்பெற்றது
(3) சோழ அரசர்கள் சிவபாத சேகரன் என்னும் விருதுப் பெயர்பெற்றமை
(4) காஞ்சிபுரத்தில் வடமொழிக் கல்விக்கூடம் அமைத்தமை
(5) சைவ ஆலயங்களை பெரிய அளவில் அமைத்தமை

**47.** ஆரியசமாஜத்தின் பணிகள்

(1) சாதி, மத, பால் வேற்றுமைகளை பாராட்டாமை
(2) மூட நம்பிக்கைகளை எதிர்த்தமை
(3) மதம் மாறியவர்களை 'சுத்தி' கிரியை மூலம் இணைத்தமை
(4) தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் பூணூல் அணிவித்தமை
(5) தேசிய கல்வி முறைமையினை எதிர்த்தமை

**48.** இந்துக் கலைக் கோட்பாடு

(1) கலை என்பது இயல்பாகவே ஒழுங்கு விதிமுறைகளைக் கொண்டுள்ளது.
(2) இந்துப் பண்பாட்டில் கலை மிக முக்கியத்துவம் பெறுகிறது.
(3) இந்து மரபில் கலை அனுபவமும் ஆத்மீக அனுபவமும் ஒரே அனுபவமாகும்.
(4) இந்துப் பண்பாட்டில் கலை உருவாக்கம் என்பது தூய உளச் செயற்பாடாகும்.
(5) இந்துக் கலை மனித வாழ்வை வளம்படுத்த அதிகம் உதவுவதில்லை.

**49.** மகா புராணங்கள் பற்றிய விளக்கம்

(1) இந்துப் பண்பாட்டின் கருவூலம் ஆகும்.
(2) பஞ்சலக்கணங்களைக் கொண்டு விளங்குகின்றன.
(3) மூர்த்தி, தலம், தீர்த்தம் பற்றிக் கூறுகின்றது.
(4) மகாபுராணங்கள் எட்டாகும்.
(5) சமய விழுமியங்களைச் சிறப்பித்துக் கூறுகின்றன.

**50.** திருக்கோணேச்சர தலச் சிறப்பு

(1) நாயன்மார்களால் பதிகம் பாடப்பட்டமை
(2) பாவநாச தீர்த்தத்தினைக் கொண்டு விளங்குவது
(3) மகாவம்சத்தில் போற்றப்படுவது
(4) மாதோட்டத்தில் அமைந்துள்ளது
(5) இன மத வேறுபாடு இன்றி வழிபடப்படுவது

* * *

# (46) இந்து நாகரிகம்
## வினாத்தாள் II

* **பகுதி** I இலிருந்து எவையேனும் **இரண்டு** வினாக்களையும், **பகுதி** II இலிருந்து எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

---

### பகுதி I

**1.** இந்து நாகரிக வரலாற்றில் வேதங்கள் பெறும் முக்கியத்துவத்தினை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.

(அ) சமய நம்பிக்கைகள்
(ஆ) தத்துவ சிந்தனைகள்
(இ) வாழ்வியல்
(ஈ) தர்மங்கள்

(4 × 5 = 20 புள்ளிகள்)

**2.** பல்லவர்கால பக்தி மரபில் திருக்கோயில்கள் பெற்ற செல்வாக்கினை மேல்வரும் தலைப்புகளில் விளக்குக.

(அ) மன்னர்களின் பங்களிப்பு
(ஆ) பல்லவர் காலத்துக் கோயில்களின் வகைகள்
(இ) திருக்கோயில் வழிபாடு
(ஈ) நாயன்மார்களும் கோயில்களும்

(4 × 5 = 20 புள்ளிகள்)

**3.** வடஇந்திய பக்தி நெறியாளர் வரிசையில் மீராபாயின் பங்களிப்பினை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.

(அ) வடஇந்தியாவில் பக்தி நெறிக்கான சூழ்நிலை
(ஆ) மீராபாயின் பக்தி வெளிப்பாடு
(இ) மீராபாயின் படைப்புக்கள்
(ஈ) மீராபாயின் படைப்புக்களின் சிறப்பம்சங்கள்

(4 × 5 = 20 புள்ளிகள்)

### பகுதி II

**4.** இலங்கையில் பொலநறுவைக் காலப்பகுதியில் இந்துப் பண்பாட்டில் ஏற்பட்ட மாற்றங்களை அக்கால அரசியல் சூழ்நிலை, திருக்கோயில்களின் எழுச்சி ஆகியவற்றைக் கருத்திற்கொண்டு பரிசீலிக்குக.

(20 புள்ளிகள்)

**5.** மேற்குலக நாடுகளில் இந்து நாகரிகம் பரவியவாற்றை ஐக்கிய இராச்சியத்தைக் கருத்திற் கொண்டு பரம்பலுக்கான காரணங்கள், அந்நாகரிகத்தின் சமகால செல்நெறி ஆகியவற்றின் அடிப்படையில் ஆராய்க.

(20 புள்ளிகள்)

**6.** சங்கரருடைய வேதாந்தம் ஒரு தத்துவக் கோட்பாடாக உருவாகியமையை அவர் ஏற்றுக்கொண்ட பிரமாணங்கள், கோட்பாட்டின் பிரதான கொள்கைகள் ஆகியவற்றைக் கருத்திற் கொண்டு விளக்கிக் கூறுக.

(20 புள்ளிகள்)

**7.** சைவ சித்தாந்த தத்துவம் பெறும் முக்கியத்துவத்தினை இறைவனுக்கும் ஆன்மாவுக்குமுள்ள தொடர்பினையும் ஆன்மா முக்தியடையும் வழிகளையும் கருத்திற் கொண்டு ஆராய்க.

(20 புள்ளிகள்)

**8.** இந்து சமுதாய வளர்ச்சியில் இந்துக்கல்விப் பாரம்பரியம் பெறும் இடத்தினை, இந்துக் கல்வியின் மூலங்கள், குருகுலக் கல்வி ஆகியவற்றின் அடிப்படையில் விளக்குக.

(20 புள்ளிகள்)

* * *